குறையாதொன் றுலுமற நிறைவாகும் பாதநம குறியாநின் சோதிதரு குரவாநின் பாதநம, சிறையாவென் றீமனமு ளுறைவாய்நின் பாதநம சினமார்வந் தீரவரு டெளிவாகும் பாதநம, மறையாலுங் கோதின்முனி கணமாகஞ் சேரமரர் மதியாலுந் தாளின்வழி படுமாநின் றுயுமறு, துறையாலுஞ் சார்வரிய சுடரேநின் பாதநம சொருபானந் தாயநம சொருபானந் தாயநம. 6

வழுவாவன் பாலினிய மனனுல்வந் தார்மதுர மொழியானன் றுயமது மலராலுன் றுள்கடொழு, தெழுவாரிங் காதரவோடிறைவாவென் றேலமிட வெழிலாருந் தீமெழுக தெனவேநின் றுவலுட, னழுவாரிந் திராதியர னயன்மாலங் காகவருள் வலியாருங் காணும்வகை யடியேனுன் றுளிணைக, டொழுமாவந் தாளுமென துணையாகும் பாதநம சொருபானந் தாயநம சொருபானந் தாயநம. 7

அழலாலுண் டாய்கட லதுவாகுந் தீயபவ மதிலேநின் றுழுமெனை யருளாலன் போடரிய, கழலாகுஞ் சீர்பெரிய கரையேவந் தேறவருள் கனியேயுன் கோலமல ரடியேகண் காணவரு, ளெழிலாருஞ் சீரடிய• ரடியாலங் கேவுதொழி லினிதாமன் போடுமெனை சிரமேகொண் டாருமிது, தொழிலாநெஞ் சோடுமுன தடியேனுங் கூடவருள் சொருபானந் தாயநம சொருபானந் தாயநம. 8

உரையாடுந் தோறுமென துளமானந் தாதிசய மொழியாதன் பாயுருகி விழியாறங் கோடிமிகு, திரையாய்வந் தாலுமென செயலாலன் றீதொர்செயல் சிறியேனென் றுலுமிது தெரியேனந் தோவருள்செய், புரையாதொன் றுலுமறு புலையேனெஞ் சாரும்வகை புகுதாவெஞ் சாமலுழல் புலமாகுந் தீயமிகு, துரையாவுந் தீரவெழு சுடராகும் பாதநம சொருபானந் தாயநம சொருபானந் தாயநம.

அறவாநின் பாதநம வமலாநின் பாதநம வருளேநின் பாதநம வழகாநின் பாதநம, திறவாநின் பாதநம செறிவேநின் பாதநம சிவமேநின் பாதநம தெளிவேநின் பாதநம, வுறவாநின் பாதநம வுயிரேநின் பாதநம வுணர்வேநின் பாதநம வொளியேநின் பாதநம, துறவாநின் பாதநம சுகமேநின் பாதநம சொருபானந் தாயநம சொருபானந் தாயநம. 10

சொரூபாநந்தர் நாமஸ்துதி முற்றிற்று.



# மாதவம்.

பாடுதுறை.

தத்தம வேறுவி காரமென்று தற்குணா ராது வீடுறப்
புத்தக மோதி மாளுகின்ற புத்தர்முன் ஞான வாதிகள்
கத்தில்வி ழாத வாறுவந்து கைக்கொளு நாத னார்தமை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. 1

† போத்தையில் வூன மாகிவந்த புற்புத நானெ னுவகை
சத்திய ஞான மானவின்ப தத்துவ மாக வேசெய
வித்தக வேட மாகிவந்த மெய்த்தவ நாத னார்தமை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. 2

† பொத்திய வூன மாகிவந்த புற்புத மாகி நானெ னுது, சத்திய ஞான மானவின்ப தத்துவ மாகு வானெனை என்றும் பாடமுண்டு.

அத்தனை வேறி லாதெழுந் தத்தமி யாத சோதிசிற்
சத்தென வேத மோதுமொரு தற்பொரு டானி தாமெனச்
சித்தநல் வேட மாகிவந்து செப்பிய நாத னார்தமை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே 3

சித்த விகார மாகிநின்று சிற்சட வேறு பாடுசெய்
பெத்தமும் வீடு மாய்மயங்கு பித்தது தீரு மாறுசற்
சித்தென தாக மாகவொன்று செப்பிய நாத னார்தமை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. 4

முத்தனை மூல நாடிலொன்றை முற்படு மாதி மூலனைச்
சுத்தனை மேனி தானிதென்று சுட்டவொண் ணாத சோதியைச்
சித்தனை வேறி லாவனந்த சிற்சுக லோக † தியாகியை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. 5

† தாயியை என்றும் பாடமுண்டு.

முத்தியை மேவ யானிங்ஙன் முற்பட மேவி மொய்கழற்
பத்தியை மேவ மேனிகொண்டு பத்தர்கள் சூழ வேபுகுந்
தெத்தியென் னுவி வாரியுண்டு மெற்றுதி பேணு மீசனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. 6

இத்தனை யோர்வு ‡ முறுநெஞ்சி லெட்டிடை மாதர் பாலுற
மத்தரின் வீழு மாறுகண்டு வைத்தெனை மாசி லாதமெய்த்
தத்துவ மாக வேதகஞ்செய் சற்குரு நாத னார்தமை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. 7

‡ முதநெஞ்சி என்றும் பாடமுண்டு.

வித்தக மாக † வேபரந்த மெய்ப்பொருள் போலு மேதினி
கத்தல மேவு மூதையம்பு கட்டழல் சோம சூரியர்
சித்திய மான ஞானினைந்த சித்திர காரி யார்தமை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. 8

† வேபரந்து மெய்ப்பொருள் போல என்றும் பாடமுண்டு.

தோத்தற மாடு வீடுமைந்தர் சுற்றமொ டாசை மாறிமெய்ப்
பத்திமெய்ஞ் ஞான மேவுசிந்தை பற்றிவி டாது மேவுகின்ற
வுத்தம சீல ரோடுவந்தெ னுச்சியின் மேவு பாதனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. 9

ஒத்ததொவ் வாத தாயலைந்த வுற்பவ வேலை பாழ்பட
நித்தமெய்ஞ் ஞான மாமனந்த நிர்க்குண தீர மேறிநற்
பத்தர்கள் பாடி யாடவந்த பதம் விராச பாதனை
யெத்தனை யூழி மாதவஞ்செய் திப்படி காண லாவதே. 10

மாதவம் முற்றிற்று.



## அருமை.



பாடுதுறை.

நான்மறை யோதிப் பொருள்வி ரித்து
நாடறி யக்கல்வி சாற்றி னாலுந்
தானது வாகை யரிது காணுஞ்
சலிப்பற நிற்கை யரிது காணும். 1

எல்லையி லாகம மேற வோதி
யேதுக்க ளெல்லா மியம்பி னாலு
மல்ல லறுக்கை யரிது காணு
மறிவா யிருக்கை யரிது காணும். 2

இணங்காமை யெல்லா மறத்து றந்தே
யிருட்டற வேதாந்த மோதி னாலும்
பிணங்கா திருக்கை யரிது காணும்
பேரின்ப மாகை யரிது காணும். 3

பற்றற விட்டுத் தலைப றித்துப்
பாணியைப் பண்ணிப் பயின்றக் காலு
முற்ற நிலைநிற்கை யரிது காணு
முடிய நிலைநிற்கை யரிது காணும். 4

ஆறு சமயப் பொருளுங் கற்றே
யங்குள்ள தர்க்கங்கள் சாற்றினு
மாறி யிருக்கை யரிது காணு
மதுவிது வாகை யரிது காணும். 5

தேறி யுலக மனைத்தினையுஞ்
சிற்பர ‡ மாகத் தெளிந்தக் காணு
மாறி யிருக்கை யரிது. காணு
மவிரோத மாகை யரிது காணும். 6

‡ மாகநாஞ் செப்பினும் என்றும் பாடமுண்டு.

வேறு பிறிதிலா † மேன்மை கண்டு
வித்தார மாக விளம்பினு
மாறி யிருக்கை யரிது காணு
மவிரோத மாகை யரிது காணும். 7

† மெய்ம்மை தன்னை என்றும் பாடமுண்டு.

அருமை முற்றிற்று.

---

## பகிடி.

---

கழியாம லூழியூழி யுறவாகி வருகின்ற
கருவினை நாசனென் றிடுபகிடி
கண்டிருந் தனையாளக் † கழல்காட்டிக் கொடியிட்ட
கருணைமா மலையனென் றிடுபகிடி.
‡ விழியாலே தனையாக வெனைமாளச் சதுர்செய்த
விரகினை யுடையானென் றிடுபகிடி
விரவியே யுடனாயி ருலகங்கண் முழுதையும்
விரவாத வீரனென் றிடுபகிடி. 1

† கழல்கட்டி என்றும், ‡ விழியாவே என்றும் பாடமுண்டு.

அறிவானொ டறிபொரு ளாகியே யெழுஞ்செல்ல
லழகுறத் திரித்தானென் றிடுபகிடி.
யறிபொரு ளறிவினி லறிவித்தவ் வறிவையு
மறிவானி லழித்தானென் றிடுபகிடி.

பொறிபுலன் கரணங்கள் புகல்சிவ பரனென்னும்
　　பொருளற விழித்தானென் றிடுபகிடி
பொருவிலா வொளிவாகிப் புரையற நிறைந்துள்ள
　　புரணமே யானேமென் றிடுபகிடி. 2

சதகோடி விதமாக வெழுந்திடுஞ் சடங்கினைச்
　　சாடிய சதுரனென் றிடுபகிடி
சதுமறை யொருமூவர் தலையுற வுணங்கியுஞ்
　　சாருதற் கரியானென் றிடுபகிடி
மதமான் துணையாக வஞ்சத்தே செலுமெனை
　　வலிந்தவன் தாண்டானென் றிடுபகிடி
வாசாம கோசர வடிவினை மலர்க்கையின்
　　மணியென வளித்தானென் றிடுபகிடி. 3

பகிடி முற்றிற்று.



திருமுடியடைவு.



சிவஞா... பெற்று தேசிக வசிட்டனுஞ் சிறக்குகன புதனவனே... சித்தயோகி நித்தியநாதனிரண காலனுந் திகழுநந்தவேகனு, ...அருள தானபரமானந்தர் சிவானந்த ரருளுங்கிருபானந்தரும் ...ரியதிரு வள்ளுவன் வரமாசி லாமணியு மானசிவசுந்தரியொடே, ...வுமறவே வந்தபர மானந்த நாதனும் பகருமாரதிராசன - பாங்குண்டு நல்லபர மானந்த தீர்த்தரும் பரமானந்தயோகியு, மவமறவே வந்தவய் யானன தேவரா சய்யனுட னேயையரு - மருளான மண்டபா மானந்த ராமீவர்க ளருளுமா சாரியர்களே. 1



பெருந்திரட்டு
(குறுந்திரட்டுடன்),
முற்றிற்று.



குருவே துணை.



